அந்தரங்கமானது



# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த (உயர் தர)ப் பரீட்சை - 2018

## 47 - இஸ்லாமிய நாகரிகம்



**700 Year old Masjid in the city of xian - Chaina.**

இந்த விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக்கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளன

# பரீட்சகர்களுக்கான பொது அறிவுறுத்தல்கள்

## 47 - இஸ்லாமிய நாகரிகம்

1. நீங்கள் பொறுப்பேற்றுள்ள இப்பணி மாணவர்களின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் ஒன்றாதலால் மிகப் பொறுப்புணர்ச்சியோடு நிறைவேற்ற வேண்டியதொன்றாகும்.
2. இப்பணியில் நீங்கள் மிக நேர்மையாக நடக்க வேண்டுமென்பது பரீட்சைகள் திணைக்களத்தின் எதிர்பார்ப்பாகும்.
3. இப்பணி, மறுமையில் அல்லாஹ்விடத்தில் பதில் சொல்ல வேண்டிய ஒரு செயல் என்பதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்வது உங்களது செயற்பாடுகளை நேர்மையாக முன்னெடுத்துச் செல்வதற்கு நிச்சயம் உதவும்.
4. **புள்ளித்திட்டம்**

   புள்ளித்திட்டம் பரீட்சகர்களிடையே ஒரு முகப்பாட்டை ஏற்படுத்துமாதலால், மாணவர்கள் நியாயமான முறையில் மதிப்பீடு செய்யப்படுவதற்காக, புள்ளித்திட்டத்தை முழுமையாகப் பின்பற்றுவது மிக அவசியமாகும்.
5. **அறிவுறுத்தல்கள்**

   பரீட்சைகள் திணைக்களம் முன்வைத்துள்ள அனைத்து அறிவுறுத்தல்களையும் பரீட்சகர்கள் முழுமையாகப் பின்பற்றுதல் அவசியமாகும்.
6. **விடைத்தாள் மதிப்பீடு**

   விடைத்தாள்களை மதிப்பிடும் பணியை ஆரம்பிக்க முன் ஒவ்வொரு வினாவுக்கும் மாணவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படும் விடை யாது என்பதை புள்ளித்திட்டத்தை நன்கு வாசித்து விளங்கிக் கொள்ளல் வேண்டும். மேலதிக விளக்கங்கள் தேவைப்படின் பிரதம கட்டுப்பாட்டாளர்/ பிரதம பரீட்சகரின் ஆலோசனையைப் பெற்றுக்கொள்ளலாம்.
7. **புள்ளி வழங்கும் ஒழுங்கு.**

   வினாப்பத்திரம் 01

   இதில் 50 வினாக்கள் உண்டு. ஒவ்வொரு வினாவுக்கும் 02 புள்ளிகள் வீதம் மொத்தம் 50 வினாக்களுக்கும் 100 புள்ளிகள் வழங்கப்படும்.

   வினாப்பத்திரம் 02

   இதில் பகுதி I பகுதி II என இரு பகுதிகள் உள்ளன. பகுதி I ஒவ்வொன்றும் ஐந்து பிரிவுகளைக் கொண்ட மூன்று வினாக்களை உள்ளடக்கியுள்ளது. பகுதி II ஒவ்வொன்றும் இரண்டு பிரிவுகளைக் கொண்ட ஐந்து வினாக்களை உள்ளடக்கியுள்ளது. பகுதி I ல் இரண்டு வினாக்களுக்கும், பகுதி II ல் மூன்று வினாக்களுக்கும் பரீட்சார்த்திகள் விடையளித்தல் வேண்டும். ஒவ்வொரு வினாவுக்கும் 20 புள்ளிகள் வழங்கப்படும்.

| புள்ளிகள் வழங்கப்படும் ஒழுங்கு | | |
|---|---|---|
| வினாப்பத்திரம் 01<br>50 வினாக்கள்,<br>தலா 02 புள்ளிகள் | 50 x 02 | 100 |
| வினாப்பத்திரம் 02<br>பகுதி I 02 வினாக்கள்<br>பகுதி II 03 வினாக்கள்<br>தலா 20 புள்ளிகள் | 02 x 20<br>03 x 20 | 40<br>60 |

## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடல் - பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன்பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற குமிழ்முனை பேனாவை பயன்படுத்தவும்.
2. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும்போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
3. இலக்கங்களை எழுதும்போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, சிற்றொப்பத்தை இடவும்.
4. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் □ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ..................................................................... ✓ $\frac{4}{5}$
.....................................................................
.....................................................................

(ii) ..................................................................... ✓ $\frac{3}{5}$
.....................................................................
.....................................................................

(iii) ..................................................................... ✓ $\frac{3}{5}$
.....................................................................
.....................................................................

(03) (i) $\frac{4}{5}$ + (ii) $\frac{3}{5}$ + (iii) $\frac{3}{5}$ = $\boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள் (துளைத்தாள்)**

1. க.பொ.த.(உ. தர) மற்றும் தகவல் தொழிநுட்பப் பரீட்சைக்கான துளைத்தாள் திணைக்களத்தால் வழங்கப்படும். சரியாக துளையிடபட்டு அத்தாட்சிப்படுத்திய துளைத்தாள் தங்களுக்கு கிடைக்கப்பெறும். அத்தாட்சிப்படுத்திய துளைத்தாளைப் பயன்படுத்துவது பரீட்சகரின் கடமையாகும்.
2. அதன்பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்துவிட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை ✓ அடையாளத்தாலும் பிழையான விடையை O அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும். பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் ✓ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.
2. புள்ளிகளை ஓவலண்ட் கடதாசியின் இடது பக்கத்தில் குறிக்கவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன் பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக 2 இலக்கங்களில் பதியவும். வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்களை தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டி விடவும்.
4. மொத்த புள்ளிகளை கவனமாக கூட்டி முன் பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் வழங்கப்பட்டுள்ள விடைகளுக்கான புள்ளியை மீண்டும் பரிசீலித்த பின் முன்னால் பதியவும். ஒவ்வொரு வினாக்களுக்கும் வழங்கப்படும் புள்ளிகளை உரிய விதத்தில் எழுதுவும்.

## புள்ளிப்பட்டியல் தயாரித்தல்

இம்முறை சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்படமாட்டாது. இது தவிர ஒவ்வொரு வினாப் பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதியப்பட வேண்டும். வினாப்பத்திரம் I இற்குரிய புள்ளிப்பட்டியலில் "வினாப்பத்திரம் I" என்ற நிரலில் பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும். பகுதிப்புள்ளிகளை உள்ளடக்கி "வினாப்பத்திரம் II" எனும் நிரலில் வினாப்பத்திரம் II இற்குரிய இறுதிப்புள்ளியை பதிய வேண்டும். 51 சித்திரப் பாடத்திற்குரிய I, II, மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுதுதல் வேண்டும்.

ooo

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2018 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2018 ஓகஸ்ட்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2018

06.08.2018 / 0830 - 1030

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය I
இஸ்லாமிய நாகரிகம் I
Islamic Civilization I

47 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது சுட்டெண்ணை எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* 1 தொடக்கம் 50 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிந்தெடுத்து, அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய விடைத்தாளில் புள்ளடி (x) இடுவதன் மூலம் காட்டுக.

1. நபிகளாரின் தோழர்களுள் அஸ்ஹாபுஸ் ஸுப்பாக்களில் ஒருவராக இருந்து ஹதீஸ் துறைக்கு அளப்பரிய பங்காற்றியவர்
   (1) ஸைத் பின் ஸாபித் (ரழி) (2) அபூ ஹுரைரா (ரழி) (3) இப்னு மஸ்ஊத் (ரழி)
   (4) பிலால் (ரழி) (5) இப்னு அப்பாஸ் (ரழி)

2. நபிகளாரின் பதினைந்தாவது வயதில் மக்காவில் இடம்பெற்ற யுத்தம்
   (1) ஹர்புல் புஜ்ஜார் (2) ஹர்புல் நஜ்ஜார் (3) ஹர்புல் புழுல்
   (4) ஹர்புல் புஆத் (5) ஹில்புல் புழுல்

3. ஜாஹிலிய்யாக் காலத்தில் நடைமுறையில் இருந்த திருமண முறைகளைக் காட்டும் சரியான தொகுதியினைத் தெரிவு செய்க
   (1) இஸ்திப்ழாஃ, அல்-முத்ஆ, ஸிகாயா, தவாதிஃ.
   (2) அத்தவாதிஃ, அத்தமத்துஃ, அல்-முத்ஆ, அல்-இஸ்மத்
   (3) நிகாஹ் ஸஹீஹ், நிகாஹுல் இஸ்திப்ழாஃ, நிகாஹுல் முத்ஆ, நிகாஹுஸ் ஸரீத்
   (4) அல்-இஸ்திப்ழாஃ, அத்தவாதிஃ, அல்-முத்ஆ, அஷ்ஷிஃகார்
   (5) அஸ்ஸிகாயா, அர்ரிபாதா, அல்ஹிஜாபா, அத்தியாரா

4. பின்வருவனவற்றுள் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
   (1) அகபா உடன்படிக்கை நபிகளாருக்கும் நஜ்ஜாசி மன்னருக்கும் இடையில் செய்துகொள்ளப்பட்டதாகும்.
   (2) அன்னை ஆயிஷா (ரழி) 'தாதுன் நிதாகைன்' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டார்.
   (3) மதீனா சாசனம், மக்கா குறைஷிகளுக்கும் மதீனா முஸ்லிம்களுக்குமிடையில் செய்து கொள்ளப்பட்டதாகும்.
   (4) தாயிபுக்கான ஹிஜ்ரத்தின்போது முஸ்லிம்கள் வரவேற்கப்பட்டார்கள்.
   (5) மக்கா வெற்றி ஹிஜ்ரி 8 இல் இடம்பெற்றது.

5. பின்வருவோருள் இந்திய முஸ்லிம் ஆட்சியாளர் பரம்பரையினர் **அல்லாதோர்**
   (1) மொகலாயர் (2) முவஹ்ஹிதூன் (3) துக்லக்குகள்
   (4) ஐபக்குகள் (5) லோடிகள்

6. பின்வருவனவற்றுள் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
   (1) தகவல் திணைக்களம், அரபு மொழியில் தீவானுல் ரஸாஇல் என அழைக்கப்படும்.
   (2) ஹதீஸ் கலையில் 'மதன்' என்பது திறனாய்வுக் கலை எனப்படும்.
   (3) இஸ்லாமிய சீர்திருத்தவாதிகள் முஜத்தித் எனப்படுவர்.
   (4) மத்ஹபுகளின் தோற்றத்திற்கும் இஜ்திஹாதுக்கும் இடையே தொடர்பேதும் காணப்படுவதில்லை.
   (5) கலீபா மாமூன் அவர்களால் பைதுல் ஹிக்மா நிறுவப்பட்டது.

7. பின்வருவனவற்றுள் மூன்று கூற்றுகள், குறித்ததொரு கலைக்கு ஒத்ததாகவும் ஏனைய இரண்டு கூற்றுகள் அதற்கு முரண்பட்டதாகவும் காணப்படுகின்றன.

A – 'அஸ்பாப் அந்நுஸூல்' என்பது அல்-குர்ஆன் வசனங்கள் அருளப்பட்டமைக்கான பின்னணியைக் குறிக்கிறது.

B – 'முஅத்தா' எனும் நூல் இமாம் மாலிக் அவர்களால் தொகுக்கப்பட்டது.

C – கலீபா உஸ்மான் (ரழி) அவர்கள் 'ஜாமிஉல் குர்ஆன்' எனும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படுகின்றார்.

D – இப்னு அப்பாஸ் (ரழி) தப்ஸீர் கலை மேதையாவார்.

E – ஸஹீஹைன் என்பது இமாம் புகாரி, இமாம் முஸ்லிம் ஆகியோருக்குரியதாகும்.

மேற்குறித்த கூற்றுகளுள் குறித்ததொரு கலைக்கு முரண்பட்ட இரு கூற்றுகளும் யாவை?

(1) A, B (2) A, C (3) A, D (4) B, D (5) B, E

8. இஸ்லாமிய வரலாற்றில் தோன்றிய முரண்பட்ட சிந்தனைப் பிரிவுகளுள் காலத்தால் பிந்தியது

(1) காதியானி (2) ஷீஆ (3) கவாரிஜ்
(4) முர்ஜிஆ (5) ஜபரிய்யா

9. ஹதீஸ் கலை வரலாற்றில் 'மவ்ழூஆத்' எனும் பதம் சுட்டும் பொருள்

(1) ஷீஆக்களால் ரிவாயத் செய்யப்பட்டவை
(2) கருத்து தெளிவற்ற ரிவாயத்துக்கள்
(3) நபி முஹம்மது (ஸல்) அவர்கள் கூறியதாக புனையப்பட்டவை
(4) கவாரிஜ்களின் அறிவிப்புக்கள்
(5) அறிவிப்பாளர் வரிசையில் நபிகளாரைத் தொடர்ந்து தாபிஈ வரும் இஸ்னாதைக் கொண்ட ஹதீஸ்கள்

10. கலீபா உமர் (ரழி) அவர்களுடன் தொடர்புடைய விடயம்

(1) தனது வாரிசாக உஸ்மான் (ரழி) அவர்களை நியமித்தமை
(2) ஹிஜ்ரி ஆறாம் வருடம் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டமை
(3) ஹிஜ்ரி 13 ஆம் வருடத்தில் கிலாபத்தை பொறுப்பேற்றுக்கொண்டமை
(4) ஸைபுள்ளா என்ற சிறப்புப் பெயர் பெற்றமை
(5) குலபாஉர் ராஷிதீன்களுள் கூடிய காலம் ஆட்சி செய்தமை

11. உமையா, அப்பாஸியா, உஸ்மானியா ஆட்சியில் நிர்வாகத் தலைநகரங்கள் முறையே

(1) மதீனா, டமஸ்கஸ், இஸ்தான்பூல்
(2) டமஸ்கஸ், பக்தாத், இஸ்தான்பூல்
(3) மக்கா, கூபா, பஸரா
(4) மக்கா, மதீனா, டமஸ்கஸ்
(5) டமஸ்கஸ், கொரடோவா, இஸ்தான்பூல்

12. அப்துல்லாஹ் பின் உரைக்கத், ஸப்வான் இப்னு உமைய்யா ஆகிய முஸ்லிம் அல்லாத இருவரும் முக்கிய இரு நிகழ்வுகளில் நபியவர்களுக்கு ஒத்துழைப்பு வழங்கியவர்களாவர். அவ்விரு நிகழ்வுகளும் யாவை?

(1) ஹிஜ்ரத், ஹுதைபிய்யா உடன்படிக்கை
(2) ஹிஜ்ரத், முதலாம் அகபா உடன்படிக்கை
(3) ஹிஜ்ரத், ஹுனைன் யுத்தம்
(4) ஹிஜ்ரத், பத்ரு யுத்தம்
(5) அபிஸீனிய ஹிஜ்ரத், கந்தக் யுத்தம்

13. பின்வரும் அட்டவணையில் X நிரலில் புகழ்பெற்ற சில கட்டடங்களின் பெயர்களும் Y நிரலில் அவை அமைந்துள்ள நகரங்களின் பெயர்களும் Z நிரலில் அவற்றை நிர்மாணித்தவர்களின் பெயர்களும் தரப்பட்டுள்ளன.

| X | Y | Z |
|---|---|---|
| 1 - அல் ஹம்ரா | A - தில்லி | D - அம்ரிப்னல் ஆஸ் |
| 2 - ஜாமிஉல் அம்ரிப்னல் ஆஸ் | B - கைரோ | E - ஐபக் |
| 3 - குதுப்மினார் | C - ஸ்பெயின் | F - அல் அஹ்மர் |

இங்கு X நிரலுக்குப் பொருத்தமான விதத்தில் Y,Z நிரல்கள் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள தெரிவு யாது?
(1) BE, AF, CD (2) AF, BE, CD (3) CF, BD, AE
(4) CE, BD, AF (5) AD, BE, CF

14. பின்வருவனவற்றுள் இஸ்லாமிய நாகரிகத்தின் பண்பாகக் கொள்ளத்தக்கது
(1) குறிப்பிட்ட ஒரு இனத்தவரை மாத்திரம் இலக்காகக் கொண்டிருத்தல்
(2) அரசியலையும் சமயத்தையும் வேறுபடுத்தி நோக்குதல்
(3) துறவறத்தை மாத்திரம் போதித்தல்
(4) ஆன்மீகத்தையும் லௌகீகத்தையும் இணைத்து நோக்குதல்
(5) பகுத்தறிவுக்கு முதன்மை கொடுத்தல்

● பின்வருவன அப்பாஸியக் கால அறிவியல் துறை வளர்ச்சியின் காரணமாகத் தோன்றிய பல்துறை அறிஞர்களுள் சிலரது பெயர்களாகும். இவற்றை அடிப்படையாகக் கொண்டு 15 தொடக்கம் 20 வரையுள்ள வினாக்களுக்கு விடை தருக.

| | | |
|---|---|---|
| A – அர்ராஸி | F – அல்கிந்தி | K – அல்-குவாரிஸ்மி |
| B – இப்னு ஸீனா | G – இப்ராஹீம் அல் பஸாரி | L – இப்னு கல்தூன் |
| C – நாஸிருத்தீன் தூஸி | H – அல் இத்ரீஸி | M – வாகிதி |
| D – அல்பர்ஹானி | I – முஹம்மது பாகி | N – சஹ்ராவி |
| E – ஹிஷாம் அல் கல்பி | J – உமர்கையாம் | O – அல் சர்காலி |

15. 'கிதாபுத் தாரீக் வல் மகாஸிதி', 'முகத்திமா' எனும் வரலாற்று நூல்களை எழுதியவர்கள் முறையே
(1) A, B (2) E, L (3) I, M (4) L, M (5) M, L

16. செல்ஜூக்கியர் காலத்தில் புகழ்பெற்று விளங்கியவரும் 'மகாலத் பில் ஜபர் வல் முகாபலா' எனும் கணித நூலை எழுதியவருமான அறிஞர்
(1) A (2) B (3) G (4) H (5) J

17. மருத்துவத்துறைக்கு பங்காற்றிய மூன்று முக்கிய முதல்தர மருத்துவர்கள்
(1) A, B, N (2) A, B, J (3) A, D, B (4) A, E, F (5) B, C, H

18. அப்பாஸிய கலீபா மாமூன் காலத்தில் 'PTOLEMY' இன் புவியியல் நூலை ஆதாரமாகக் கொண்டு 'கிதாபு சூரதுல் அர்ழ்' எனும் பிரபல்யமான புவியியல் நூலை எழுதியவர்
(1) A (2) B (3) C (4) F (5) K

19. வானியல் துறையில் புகழ்பெற்று விளங்கிய அறிஞர்களின் பெயர்களை உள்ளடக்கிய தொகுதி
(1) A, J (2) B, F (3) C, O (4) D, M (5) E, O

20. மங்காவின் 'சித்தாந்த' எனும் நூலைத் தழுவி ஆய்வுகளை மேற்கொண்டவரும், அப்போதைய இஸ்லாமிய உலகின் முதல் வானியலாளராகக் கருதப்படுபவருமான அறிஞர்
(1) F (2) G (3) H (4) J (5) K

**21.** அல்-குர்ஆனிலே இடம்பெற்றுள்ள சில சட்டங்களை இபாரதுன் நஸ், இஷாரதுன் நஸ், இக்திலா உன் நஸ் எனப் பிரித்து விளக்குவர். இவற்றுள் இபாரதுன் நஸ் என்பது
(1) தெளிவான சட்டங்கள் (2) மறைமுகச் சட்டங்கள்
(3) பிழையான சட்டங்கள் (4) தெளிவற்ற சட்டங்கள்
(5) படிமுறைச் சட்டங்கள்

**22.** அஸ்ஸிஹாஹுஸ்ஸித்தாவைத் தந்த ஆறு இமாம்களுள் மூன்று இமாம்களின் ஹதீஸ் தொகுப்புக்கள் ஸுனன் என வழங்கப்படுகின்றன. அவ் இமாம்களின் பெயர்களை உள்ளடக்கிய தொகுதி
(1) இமாம் புகாரி, அஹ்மத், திர்மிதி (2) இமாம் முஸ்லிம், திர்மிதி, நஸஈ
(3) இமாம் அபூதாவூத், நஸஈ, முஸ்லிம் (4) இமாம் புகாரி, முஸ்லிம், இப்னு மாஜா
(5) இமாம் அபூதாவூத், நஸஈ, இப்னு மாஜா

**23.** திருமணத்தின்போது மணமகன், மணப்பெண்ணுக்கு கொடுக்கும் அன்பளிப்பு
(1) சீதனம் (2) ஈஜாப் (3) கபூல் (4) மஹர் (5) கைக்கூலி

**24.** பொய் நபிமார்களுள், அதிக படைப்பலத்துடன் முஸ்லிம்களுக்கு எதிராகப் படையெடுத்தவர்
(1) அஸ்வத் அன்சி (2) ஸஜா (3) முஸைலமா
(4) துலைஹா (5) மிர்ஸா குலாம் அஹ்மத்

**25.** பின்வருவனவற்றுள் பகுத்தறிவுவாதிகளைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட சொல்
(1) அஹ்லுர் ர.'யு (2) அஹ்லுல் குர்ஆன் (3) அஹ்லுல் கிதாப்
(4) அஹ்லுல் ஹதீஸ் (5) அஹ்ல் பைத்

● பின்வருவன இஸ்லாமியக் கலைகளுடன் தொடர்புபடும் பல்வேறு கலைச்சொற்களாகும். அவற்றைப் பயன்படுத்தி **26** தொடக்கம் **30** வரையிலான வினாக்களுக்கு விடை தருக.

| | | |
|---|---|---|
| A – ரிஸாலத் | F – மஆத் | K – மிம்பர் |
| B – நிகாஹ் | G – தப்ஸீர் | L – மதன் |
| C – வஹி | H – மஹர் | M – இஸ்ராயிலிய்யாத் |
| D – மினாரா | I – மிஹ்ராப் | N – தலாக் |
| E – ராவி | J – தௌஹீத் | O – அஸ்மாஉர் ரிஜால் |

**26.** அகீதாவுடன் தொடர்பான சொற்கள்
(1) A, D, G (2) A, F, J (3) B, C, O (4) E, H, K (5) F, L, M

**27.** அல்-குர்ஆனுடன் தொடர்புடையவை
(1) B, C, M (2) C, F, H (3) C, G, M (4) C, H, O (5) C, I, L

**28.** குடும்ப வாழ்வுடன் தொடர்புபடுபவை
(1) A, B, H (2) A, C, H (3) B, H, N (4) C, F, J (5) C, F, K

**29.** ஹதீஸ் கலையுடன் தொடர்புடைய சொற்கள்
(1) A, B, C (2) B, L, O (3) C, L, O (4) E, L, O (5) K, L, O

**30.** இஸ்லாமியக் கட்டடக்கலையுடன் தொடர்புடைய கூறுகள்
(1) A, I, K (2) B, F, K (3) B, I, K (4) C, G, L (5) D, I, K

**31.** 'இஸ்லாமிய சட்டக்கலை ஒரு வரலாற்று நோக்கு' என்ற நூலை எழுதிய ஆசிரியர்
(1) சீ.எம்.ஏ. அமீன் (2) ஏ.எம்.எ. அஸீஸ்
(3) கலாநிதி. எம்.ஏ.எம். சுக்ரி (4) எம்.ஐ.எம். அமீன்
(5) ஏ.எம். அபூபக்கர்

32. பின்வருவனவற்றுள் இலங்கை முஸ்லிம் தனியார் சட்டத்தில் உள்ளடக்கப்படாத அம்சம்
(1) விவாகரத்து
(2) வாரிசுகளின் சொத்து
(3) மஹரும் கைக்கூலியும்
(4) கணவன்-மனைவி கடமைகளும் உரிமைகளும்
(5) பலதார மணம்

33. கோயா ஜான் என்பவர் தனது செல்வாக்கின் கீழ் வைத்திருந்த துறைமுகப் பகுதி
(1) கொழும்பு
(2) திருகோணமலை
(3) பேருவளை
(4) மாத்தறை
(5) ஹம்பாந்தோட்டை

34. முஸ்லிம்களின் இனத்துவம் தொடர்பாக சேர். பொன்னம்பலம் இராமநாதன் அவர்களுடைய கருத்தினை மறுதலித்த முஸ்லிம் அறிஞர்
(1) ஐ. எல். எம். ஏ. அஸீஸ்
(2) வாப்பிச்சி மரைக்கார்
(3) எம். ஸீ. சித்திலெப்பை
(4) மாப்பிள்ளை லெவ்வை ஆலிம்
(5) கசாவத்தை ஆலிம்

35. உமையா வம்ச ஆட்சியின் இரண்டாவது நிர்மாணியாக கருதப்படுபவர்
(1) யஸீத்
(2) அப்துல் மலிக்
(3) மர்வான் பின் ஹகம்
(4) உமர் இப்னு அப்துல் அஸீஸ்
(5) சுலைமான்

36. ஹிஜ்ரத்தின் பின்னர் அன்ஸார்களும் முஹாஜிர்களும் சகோதரர்களாக இணைக்கப்பட்டனர். அப்துர் ரஹ்மான் பின் அவுபு (ரழி) அவர்களுடன் இணைக்கப்பட்ட அன்ஸாரித் தோழர்
(1) அபூ ஐயூபல் அன்ஸாரி (ரழி)
(2) ஸஃது பின் ஸயீத் (ரழி)
(3) உக்காஸா (ரழி)
(4) ஸஃது பின் ரபீஃ (ரழி)
(5) ஸஃது பின் அபி வக்காஸ் (ரழி)

● **37** தொடக்கம் **40** வரையான ஒவ்வொரு வினாவிலும் **X, Y** எனும் நிரல்களின் கீழ் சில தகவல்கள் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் உள்ளவை **X** நிரலில் உள்ளவற்றுடன் ஏதேனும் ஒரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை ஒழுங்கின்றிக் காணப்படுகின்றன. **Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுடன் சரியாக ஒழுங்குபடுத்தும்போது பொருத்தமாக அமையும் சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

37.

| X | Y |
|---|---|
| (i) கிதாபு சூரதுல் அர்ழ் | A – இஸ்ராயிலிய்யாத் |
| (ii) மதீனாவில் பிறந்த இஸ்லாமிய சட்ட அறிஞர் | B – ஷீஆ |
| (iii) சமூக நலன் எனப்படும் துணை மூலாதாரம் | C – மஸ்லஹா |
| (iv) தப்ஸீர் கலையுடன் தொடர்புபடும் ஓர் அம்சம் | D – இமாம் மாலிக் |
| (v) முக்கியமான நபித் தோழர் சிலரை சபிக்கும் பிரிவினர் | E – அல் குவாரிஸ்மி |

(1) B C D E A (2) D E A C B (3) D E B C A (4) D E C A B (5) E D C A B

**38.**

| X | Y |
|---|---|
| (i) மஸாதிருல் அக்லிய்யா | A – சித்தாந்த |
| (ii) திம்மிக்கள் | B – ஸ்பெயின் |
| (iii) அல் அந்தலூஸ் | C – ஜிஸ்யா |
| (iv) அல் பிரூனி | D – வானியல் |
| (v) குப்தா | E – இஜ்மா |

(1) ACBDE (2) BCDEA (3) DEACB (4) EACBD (5) ECBDA

**39.**

| X | Y |
|---|---|
| (i) முஜ்தஹித் முத்லக் | A – அறிவிப்பாளர் வரிசை |
| (ii) அஸ்மாஉர் ரிஜால் | B – இமாம் ஷாபிஈ |
| (iii) அல் வ.்து வல் வசத் | C – தப்ஸீர் அல் கஷ்ஷாப் |
| (iv) ஸமஹ்ஷரி | D – கணித மேதை |
| (v) அல் - கிந்தி | E – மு.்தஸிலா |

(1) ABCDE (2) BAECD (3) BEDCA (4) CDEAB (5) EBCAD

**40.**

| X | Y |
|---|---|
| (i) இஜ்மா அஸ்ஸுகூதி | A – மறுமை |
| (ii) அல் இல்லத் | B – கியாஸ் |
| (iii) உலகை வளப்படுத்தல் | C – ஷீஆ |
| (iv) மஆத் | D – அல் இமாரத் |
| (v) அப்துல்லா பின் ஸபா | E – மௌன அங்கீகாரம் |

(1) ABDEC (2) BADCE (3) CDABE (4) EBDAC (5) EDACB

**41.** பைஅதுர் ரிழ்வான் என்பது உஸ்மான் (ரழி) அவர்களுக்காக நபியவர்களும் தோழர்களும் செய்துகொண்ட உறுதி உடன்படிக்கையாகும். இதன் மற்றொரு பெயர்

(1) பைஅதுல் அகபா (2) பைஅதுல் அகபதுஸ் ஸானி
(3) பைஅதுல் மீதாக் (4) பைஅதுல் கலீபா
(5) பைஅதுஷ் ஷஜரா

**42.** அரபு எழுத்தணிக்கலை, அழகியற்கலைகளில் தனித்துவமான கலையாகும். பின்வருவனவற்றுள் அரபு எழுத்தணி வகையைச் சார்ந்தது

(1) ஸன்ஜானி (2) முஹக்கிக் (3) ஷவ்கானி
(4) மிஸ்மார் (5) தஜ்வீத்

**43.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A – இலங்கைப் பாராளுமன்றத்தின் முதல் முஸ்லிம் சபாநாயகர் எச். எஸ். இஸ்மாயில் ஆவார்.
B – கலாநிதி பதியுதீன் மஹ்மூத், கல்வி அமைச்சராகப் பணியாற்றினார்.
C – இலங்கையின் பழமைமிக்க மஸ்ஜிதுல் அப்ரார் வெலிகமையில் அமையப்பெற்றுள்ளது.
D – 'இலங்கை முஸ்லிம் ஆயிரம் வருட கால இன ஐக்கியம்' என்ற நூலை எழுதியவர் லோனா தேவராஜா ஆவார்.
E – கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கனின் ஆட்சிக்காலத்தில் மடிகே பத்த என்ற இலாகாவுக்குப் பொறுப்பாக இருந்தவர் மூஸா ஆலிம் ஆவார்.
F – இலங்கையின் அரபுக் கல்லூரிகளுள் முதலாவதாக நிர்மாணிக்கப்பட்டது மஹரகம கபூரிய்யா அரபுக் கல்லூரியாகும்.

மேற்படி கூற்றுகளுள் சரியானவை

(1) A, B, C ஆகியன மாத்திரம் (2) A, B, D ஆகியன மாத்திரம்
(3) A, C, E ஆகியன மாத்திரம் (4) B, D, E ஆகியன மாத்திரம்
(5) B, D, F ஆகியன மாத்திரம்

**44.** 'அன் நிகாஹ் அல் பாஸித்' என்பதன் பொருள்
(1) ஷரீஆ விதிமுறைகளைப் பேணி நடக்கும் விவாகம்
(2) ஒரு பெண்ணின் இத்தாக் காலம் முடிவடைய முன்பு அவளை விவாகம் புரிவது
(3) விவாக உடன்படிக்கை செல்லுபடியாகும் காலத்தை வரையறுத்தல்
(4) ஷரீஆவுக்கு முரணான திருமணம்
(5) இஹ்ராம் அணிந்த நிலையில் செய்யப்படும் நிகாஹ்

**45.** இந்தியாவை தாருள் இஸ்லாமாக பிரகடனப்படுத்திய மொகலாய ஆட்சியாளர்
(1) ஔரங்கசீப் (2) ஹுமாயூன் (3) அக்பர்
(4) ஷாஜஹான் (5) ஸஹீருத்தீன் பாபர்

- **46** தொடக்கம் **50** வரையான ஒவ்வொரு வினாவிலும் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. அக்கூற்றுகள் பற்றிய மிகப் பொருத்தமான தொடர்பைக் காட்டும் சரியான விடையினைப் பின்வரும் அட்டவணையிலுள்ள இலக்கம் (1), (2), (3), (4), (5) என்பவற்றிலிருந்து தெரிவுசெய்க.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது. | சரியானது. |
| (2) | சரியானது. | பிழையானது. |
| (3) | பிழையானது. | பிழையானது. |
| (4) | பிழையானது. | சரியானது. |
| (5) | சரியானது. | முதலாம் கூற்றைத் தெளிவாக விளக்குகிறது. |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **46.** | கலீஃபா வலீத் இப்னு அப்துல் மலிக் உமையா ஆட்சியாளர்களுள் ஒருவராவார். இவரது காலத்திலேயே ஸ்பெயின், தாரீக் பின் ஸியாத் தலைமையில் கைப்பற்றப்பட்டது. | ஹஜ்ஜாஜ் பின் யூசுப் அப்பாஸியர் ஆட்சி காலத்திலேயே இந்தியாவை நோக்கிப் படையெடுத்தார். |
| **47.** | கலீஃபா உமர் இப்னு அப்துல் அஸீஸ் (றஹ்) அவர்களின் ஆட்சிக் காலப்பகுதியில் தீவானுல் ஜுன்த், தீவானுல் பரீத் என்பன அறிமுகப்படுத்தப்பட்டன. | இலங்கையின் சுதந்திரத்துக்குப் பின்னர் அமைக்கப்பட்ட முதலாவது பாராளுமன்றத்தில், கலாநிதி ரீ. பி. ஜாயா அவர்களுக்கு தொழில் அமைச்சு வழங்கப்பட்டது. |
| **48.** | முற்காலத்தில் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழ்ந்த, தற்காலத்தில் மதீனா, சிரியா ஆகிய பகுதிகளைக் குறிக்கும் அரபுப் பெயர்கள் யஸ்ரிப், ஷாம் என்பனவாகும். | இஸ்லாமிய வரலாற்றில் மதீனா, சமய மற்றும் பண்பாட்டு வளர்ச்சியில் பிரபல்யம் மிக்கதாக காணப்பட்டது. ஷாம் சவால்களை எதிர்நோக்குமென நபியவர்களால் முன்னறிவிப்புச் செய்யப்பட்டது. |
| **49.** | இஜ்திஹாதின் அடியில் தோன்றிய மூலாதாரம் மஸாதிருன் நக்லியா எனப்படும். | ஷாஹ் வலியுள்ளா, மௌலானா மௌதூதி ஆகிய இருவரும் இந்தியாவைச் சேர்ந்த அறிஞர்களாவர். |
| **50.** | பராஅத்துடைய இரவில் அல்-குர்ஆன் அருளப்பட்டது. | உம்மஹாதுல் முஃமினீன்களான அன்னை கதீஜாவும் அன்னை ஆயிஷாவும் உடன் பிறந்த சகோதரிகளாவர். |

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2018

විෂයය අංකය / பாட இலக்கம்: **47**

විෂයය / பாடம்: **இஸ்லாமிய நாகரிகம்**

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

### I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 01. | 2 | 11. | 2 | 21. | 1 | 31. | 4 | 41. | 5 |
| 02. | 1 | 12. | 1 | 22. | 5 | 32. | 4 | 42. | 2 |
| 03. | 4 | 13. | 3 | 23. | 4 | 33. | 3 | 43. | 2 |
| 04. | 5 | 14. | 4 | 24. | 3 | 34. | 1 | 44. | 4 |
| 05. | 2 | 15. | 4 | 25. | 1 | 35. | 2 | 45. | 1 |
| 06. | 1, 3 | 16. | 5 | 26. | 2 | 36. | 2 | 46. | 2 |
| 07. | 5 | 17. | 1 | 27. | 3 | 37. | 5 | 47. | 4 |
| 08. | 1 | 18. | 5 | 28. | 3 | 38. | 5 | 48. | 5 |
| 09. | 3 | 19. | 3 | 29. | 4 | 39. | 2 | 49. | 1 |
| 10. | 3 | 20. | 2 | 30. | 5 | 40. | 4 | 50. | 3 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 02 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 2 × 50 = 100

# பகுதி I

1. (i) ஆரம்பகால முஸ்லிம்கள் இலங்கை அரசுடன் கொண்டிருந்த தொடர்புகளை விபரிக்குக.

- வர்த்தக ரீதியான தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டமை.
- ஆட்சியாளர்களுடன் நல்லுறவை வளர்த்துக் கொண்டமை.
- அரசியல் ரீதியான தொடர்புகள் (அமைச்சர்கள், தூதுவர்கள், திணைக்களப் பொறுப்பாளர்கள்.)
- அரசவையில் மருத்துவர்களாக பணியாற்றியமை.
- அரச விவகாரங்களில் முக்கிய பதவிகள் வகித்தமை.

இவை போன்ற நான்கு கருத்துக்ளை சுருக்கமாக விளக்கி இருப்பின்.. (04 புள்ளிகள்)

(ii) பிரித்தானிய ஆட்சியின் கீழ் இலங்கை முஸ்லிம்களின் நிலை குறித்து மதிப்பிடுக.

- போர்த்துக்கேய , ஒல்லாந்தர் காலத்தில் நிலவிய நெருக்குதல்கள் நீங்கியமை.
- தாராண்மைவாத கொள்கையை பின்பற்றியமை.
- முஸ்லிம்களை தனி ஒரு சமூகமாக அங்கிகரித்தமை.
- அரசியல் பிரதி நிதித்துவங்களை வளங்கியமை.
- கலாசார உரிமைகளை அனுபவிக்க வாய்ப்பளித்தமை.
- முஸ்லிம்கள் மீது ஒல்லாந்தர் விதித்திருந்த தடைகளை நீக்கியமை.

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்.. (04 புள்ளிகள்)

(iii) குலபாஉர் ராஷிதீன்களின் கலீபாத் தெரிவு முறை பற்றி விபரிக்குக.

- மக்கள் தெரிவு. (கலீபா அபூபக்கர் (ரழி), கலீபா அலி (ரழி))
- நியமன முறை. (கலீபா உமர் (ரழி))
- நியமனத்தில் தெரிவு (குழுத்தெரிவு) (கலீபா உஸ்மான் (ரழி)
- முறைகளை விளக்கி இருப்பின்.. (04 புள்ளிகள்)

(iv) கிலாபதுர் ராஷிதாவுக்கும் உமையா கிலாபத்துக்கும் இடையேயான அரசியல் நிர்வாக வேறுபாடுகளை விளக்குக.

| | கிலாபதுர் ராஷிதா | உமையா கிலாபத் |
|---|---|---|
| 01. | மக்கள் தெரிவு | வாரிசு நியமனம் |
| 02. | குடியாட்சி (பைஅத்) | முடியாட்சி |
| 03. | எளிமை | ஆடம்பரம் |
| 04. | உயர் பதிவிகளில் தகுதியும், தக்வாவும் உடையவர்களுக்கு நியமனங்கள். குடும்ப உருப்பினர்களுக்கு முன்னுரிமை | குடும்ப உருப்பினர்களுக்கு முன்னுரிமை |
| 05. | பைதுல்மால் தூய்மை பேணப்படல் பைதுல்மால் துஷ்பிரயோகம் | பைதுல்மால் துஷ்பிரயோகம் |
| 06. | மஜ்லிஸ் அஷ்ஷுூராவில் தகுதி வாய்ந்தவர்களுக்கு முன்னுரிமை | குடும்ப உருப்பினர்களுக்கும், தகுதி அற்றோருக்கும் முன்னுரிமை |

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்.. (04 புள்ளிகள்)

(v) இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் சட்டக்கலை வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்புகளையும் அவர் எதிர்நோக்கிய சவால்களையும் சுருக்கமாகத் தருக.

- ஹதீஸ், பிக்ஹ் ஆகிய இரண்டு துறைகளுக்கும் பங்களிப்புச் செய்துள்ளமை.
- சட்டக்கலையை உள்ளடக்கி நூல்கள் எழுதியுள்ளமை ( முஸ்னத் அஹமத்,கிதாப் அஸ்ஸுஹ்த், கிதாப் அஸ்ஸலாத், அந்நாஸிக் வல் மன்ஸுக்)
- இவர்களால் இத்துறைக்கு பல மாணவர்கள் உருவாக்கப்பட்டமை..
- முரண்பட்ட சிந்தனைகளை எதிர்த்தமையினால் பல சவால்களுக்கு முகங் கொடுக்க நேர்ந்தமை. (மு:்தாஸிலா)..
- ஆட்சியாளர்களின் அடக்கு முறைகளுக்கு உள்ளாகியமை. (கலீபா ம:்மூனினால் சிறையில் அடைக்கப்பட்டு சித்திரவதை செய்யப்படல்)

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுறுக்கமாக விளக்கி இருப்பின். (04 புள்ளிகள்)

**வினா இல: 02**

**2.** (i) நுபுவ்வத்துக்குப் பின்னரான மக்கா வாழ்வில் நபிகளார் எதிர்நோக்கிய சவால்களை விளக்குக.

- அழைப்புப்பணியின் ஆரம்பத்திலேயே சவால்களை எதிர் நோக்கியமை.
- உளவியல் ரீதியாக துன்புறுத்தல்களை சந்தித்தமை.
- நபிகளாரையும், அவர் தோழர்களையும் உடல் ரீதியாக துன்புறுத்தியமை
- நுபுவ்வத் பணியிலிருந்து ஒதுங்கிக்கொள்ளுமாறு பேரம் பேசியமை.
- ஷி:்பு அபிதாலிப் பள்ளத்தாக்கில் சமூகப் பகிஷ்கரிப்புக்கு உள்ளாக்கியமை.
- குடும்பத்தாரின் எதிர்ப்புக்கள் ஏற்பட்டமை .(அபூ லஹப், அபூ ஜஹ்ல் போன்றோர்.)
- கோத்திரங்கள் இணைந்து கொலை செய்ய முயற்சித்தமை..

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்.. (04 புள்ளிகள்)

(ii) நபிகளாரின் காலத்தில் மஸ்ஜிதுன் நபவியின் வகிபாகம் பற்றி மதிப்பிடுக.

- மஸ்ஜிதுந்நபவி சமூகத்தின் மத்திய தளமாக விளங்கியமை.
- வணக்க வழிபாடுகளுக்கு பயிற்ச்சியளிக்கப்பட்டமை.
- தலைமைப்பீடமாக,கலாசார கேந்திர நிலையமாக செயற்பட்டமை.
- சமூக சகவாழ்வைப்பேணும் தலமாக, விருந்தாளிகளை வரவேற்கும் மண்டபமாக, ஏழைகளுக்கு, பயணிகளுக்கு, வழிப்போக்கர்களுக்கு தங்குமிடமாக, ஓய்வெடுக்கும் இடமாக திகழ்ந்தமை.
- கல்விக் கூடமாக, திறைசேரியாக, இராணுவப் பயிற்சிப் பாசறையாக, கைதிகளின் காப்பகமாக, குற்றவாளிகளை தண்டிக்குமிடமாக காணப்பட்டமை..
- பொருட்கள் சேகரிப்புக் களஞ்சியமாக,நீதிமன்றமாக செயற்பட்டமை.
- ஸகாத் விநியோகத்தலமாக, ஆலோசனை மன்றமாக, சிகிச்சை நிலையமாக விளங்கியமை.
- அஸ்ஹாபு சுப்பா எனப்படும் திண்ணைத்தோழர்களின் நிரந்தர தங்குமிடமாக இருந்தமை.
- ஆன்மீகப் பயிற்சிப் பாசறையாக, இராணுவ பயிற்சியளிக்கும் தளமாக, அரசின் கருவூலமாக, விளங்கியமை.

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்..

(04 புள்ளிகள்)

(iii) அல்-குர்ஆனைப் பாதுகாப்பதில் கலீபா உஸ்மான் (ரழி) அவர்களின் பங்களிப்பைத் தெளிவுபடுத்துக.

- அல்குர்ஆன் தொகுக்கப்பட்ட பிரதியைத் தழுவி அல் குர்ஆனை ஒரு முகப்படுத்த ஸைத் பின் தாபித் (ரழி) தலைமையில் ஒரு குழுவை நியமித்தமை.
- ஹப்ஸா நாயகியிடம் இருந்த மூலப்பிரதியைத் தழுவி பல பிரதிகளை அமைத்து மாகாண கவர்னர்களுக்கு அனுப்பி வைத்தமை.
- பிழையாக ஓதப்பட்ட பிரதிகளை எறித்து விடுமாறு பணித்தமை.
- அல் குர்ஆனை முறையாக ஓத,கற்றுக் கொடுக்க காரிகள் அனுப்பி வைக்கப் பட்டமை.
- கலீபா உஸ்மான் ( ரழி ) "ஜாமிஉல் குர்ஆன்" எனும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டமை.

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்..

(04 புள்ளிகள்)

(iv) கலீபா உமர் இப்னு அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களின் சமய சீர்திருத்த முயற்சிகளைச் சுருக்கமாக விளக்குக.

- மார்க்கத்திற்கு முன்னுரிமை வழங்கி இஸ்லாமிய கிலாபத்தை சீர்திரித்தியமை.
- முன்னைய ஆட்சியாளர்களின் பிழையான நடைமுறைகளை மாற்றியமைத்தமை.
- ஆடம்பரத்தை தவிர்த்து எளிமையான வாழ்வு முறையை நோக்கி மக்களை வழி நடாத்தியமை.
- ஹதீஸ் தொகுப்பு முயற்சியை உத்தியோக பூர்வமாக ஆரம்பித்தமை.
- சமயப் போதகர்கள் (த்.வா குழுக்கள்) பல பிரதேசங்களுக்கும் அனுப்பி வைக்கப் பட்டமை.
- பதவி நியமனங்களின் பொழுது தக்வாவுடையவர்களுக்கு முன்னுரிமை வழங்கியமை.

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்..

(04 புள்ளிகள்)

(v) அப்பாஸிய கிலாபத்தின் வீழ்ச்சிக்கு வழியமைத்த காரணிகளுள் நான்கினைக் குறிப்பிட்டு, சுருக்கமாக விளக்குக.

- பின் வந்த கலீபாக்களின் தகுதியீனம்.
- கலீபாக்களிடையே நிலவிய பதவிப் போட்டி.
- துருக்கியரின் செல்வாக்கு அதிகரித்தமை.
- சிற்றரசுகளின் தோற்றம்.
- நிருவாக ஒழுங்கீனம்.
- சிலுவை யுத்தங்கள்.
- மங்கோலியப் படையெடுப்புகள்.
- பிற நாகரீக,கலாசாரத் தாக்கம்.

இவை போன்ற நான்கு கருத்துக்ளை சுறுக்கமாக விளக்கி இருப்பின்..

(04 புள்ளிகள்)

**வினா இல: (03)**

3. (i) தப்ஸீர் பில் ம.்.ஸூர் வலுவிழந்தமைக்கான காரணிகளுள் **நான்கினைக்** குறிப்பிடுக.

- தப்ஸீர் பில் ம.்.ஸூர் என்பதன் விளக்கம்..
- அறிவியற் கலைகள் வளர்ச்சியுற்றமை.
- தமது விளக்கங்கள் பிரபல்யமடைய வேண்டும் என சில முபஸ்ஸிர்கள் கருதியமை.
- பிற கலாச்சாரங்களின் சிந்தனை ரீதியான தாக்கங்கள்.
- அதிகமான புனைந்துரைகள் சேர்க்கப்பட்டமை
- இஸ்ராயிலியத்கள் நுழைந்தமை.
- இஸ்னாதுகள் துண்டிக்கப்பட்டு மதன் மாத்திரம் சேர்த்துக்கொள்ளப்பட்டமை.

(ii) ஹிஜ்ரி முதலாம் நூற்றாண்டில் தப்ஸீர் கலையின் வளர்ச்சி பற்றிச் சுருக்கமாகத் தெளிவுபடுத்துக.

- தப்ஸீர் நபி (ஸல்) காலத்திலேயே தோற்றம் பெறல்.
- நபியவர்களின் பணிகளுள் ஒன்றே அல் குர்ஆனுக்கு விளக்கமளித்தல்.
- குறிப்பிட்ட சஹாபாக்கள் சிலர் அல்குர்ஆனுக்கு விளக்கமளிப்பதில் முன்னணியில் இருந்தமை. (இப்னு அப்பாஸ், இப்னு மஸ்வூத்,உபை இப்னு க.்.ப் (ரழி) போன்றவர்கள்.
- நபியவர்களினதும், ஸஹாபாக்களினதும் விளக்கங்கள் தப்ஸீர் பில் ம.்.ஸூர் என அழைக்கப்படல்.
- தாபியீன்களின் காலத்தில் தப்ஸீர் தனிக்கலையாக வளர்ச்சியடைதல்.
- ஹதீஸ்கள் தொகுக்கப்பட்ட பொழுது நபியவர்கள் வழங்கிய விளக்கங்கள் "கிதாபுத் தப்ஸீர்" எனும் பெயரில் தொகுக்கப்படல்.
- மு.்.ஸிர் வகை தப்ஸீர்கள் தோற்றம் பெறல்

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்..

(04 புள்ளிகள்)

(iii) தப்ஸீர் கலையில் இஸ்ராயிலிய்யத்தின் தாக்கம் பற்றி விபரிக்குக.

- இஸ்ராயிலியத் என்பதன் விளக்கம்.
- யூத,கிறஸ்தவ கற்பனைக் கதைகள் இஸ்ராயிலியத் எனப்படல்.
- யூத,கிறஸ்தவ சமயங்களைப் பின்பற்றியவர்கள் இஸ்லாத்தில் நுழைந்ததனால் தமக்குப் பரீட்சயமான கதைகளைக் கொண்டு அல்குர்ஆனுக்கு விளக்கமளித்தமை
- இதனால் தப்ஸீர் கலையின் தூய்மை கெட்டமை.
- குர்ஆனைப்பற்றி தவறான கருத்துக்கள் முஸ்லிம்கள் மத்தியிலும் ஊடுருவதற்கு காரணமாக அமைந்தமை.
- அப்துல்லாஹ் இப்னு ஸலாம்,கஹ்புல் அஹ்பார்,வஹப் இப்னு முனப்பஹ், அப்துல் மலிக் இப்னு ஜுரைஜ் போன்றோர்கள் யூத கிறிஸ்தவ கதைகளை புகுத்திய வர்களுள் சிலராவர்.

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்.. (04 புள்ளிகள்)

(iv) நபித் தோழர்கள் அல்-குர்ஆனை விளங்கிக் கொள்வதற்கு கையாண்ட வழிமுறைகள் **நான்கினை** விளக்குக.

- அல் குர்ஆனை அல் குர்ஆனைக் கொண்டு விளங்கியமை.
- முஹம்மது (ஸல்) அவர்களிடம் நேரடியாகக் கேட்டு விளங்கிக் கொண்டமை
- சுன்னாவின் துணை கொண்டு விளங்கியமை.
- இஜ்திஹாதின் மூலம் அல் குர்ஆனை விளங்கியமை.
- இளைய சஹாபாக்கள் மூத்த சஹாபாக்களிடம் கேட்டு கற்றுக் கொண்டமை.

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்.. (04 புள்ளிகள்)

(v) தப்ஸீர் பிரர.்யு சார்ந்த தப்ஸீர்களுள் நான்கினை அதன் ஆசிரியர்களுடன் குறிப்பிடுக.

| தப்ஸீரின் பெயர்கள் | அதன் ஆசிரியர்கள் |
|---|---|
| அல் பஹ்ருல் முஹீத் | அபூ ரைஹான் |
| தப்ஸீர் அல் கஷ்ஷாப் | ஸமஹ்ஷரி |
| மபாதீஹுல் கைப் | பக்ருதீன் ராஸி |
| தப்ஸீர் ரஹ்மானி | அலி இப்னு அஹமத் |
| துர்ருல் மன்தூர் | சுயூத்தி |
| தப்ஸீர் குர்துபி | குர்துபி |
| தப்ஸீர் குர்ஆனில் அழீம் | இப்னு கஸீர் |
| ஜாமிவுல் பயான் | தபரி |

நான்கு தப்ஸீர்களையும் அதன் ஆசிரியர்களையும் குறிப்பிட்டிருப்பின்.. (04 புள்ளிகள்)

## பகுதி II

**வினா இலா: (04)**

4. (i) தஸவ்வுப் ஒரு தனிக்கலையாக வளர்ச்சியுற்றமைக்கான காரணங்களைக் குறிப்பிட்டு, தெளிவுபடுத்துக.

- தஸவ்வுப் என்பது இஸ்லாத்தின் ஆன்மீகக் கோட்பாட்டையும் அதனோடு தொடர்பான அம்சங்களையும் உள்ளடக்கும் பகுதியாகும்.
- இத்துறையின் தோற்றத்திற்கு அல் குர்ஆன் மற்றும் சுன்னா தூண்டுதலாக அமைந்தமை.
  "உள்ளத்தை தூய்மைப்படுத்தியவன் நிச்சியமாக வெற்றியடைந்து விட்டான்" (91:09)
  "இவ் உலகில் நீ ஒர் வழிப்போக்கனைப் போல் இரு......" (அல் ஹதீஸ்)
- முஸ்லிம் சமூகத்தில் அரசியல் ரீதியாக ஏற்பட்ட உட்பூசல்கலால் விரக்தியுற்ற ஒரு சாரார், உலக விவகாரங்களில் இருந்து ஒதுங்கி வாழ்ந்தமை.
- கிரேக்க, இந்து, பௌத்த தத்துவங்களின் தாக்கம்.
- ஹிஜ்ரி 2ஆம் நூற்றாண்டைத் தொடர்ந்து வந்த காலப்பகுதிகளில் தீவிர உலகப்பற்று, சடவாத சிந்தனை, ஆன்மீக வறுமை முதலாம் அம்சங்கள் முஸ்லிம் களிடையே ஊடுருவியமை.

(10 புள்ளிகள்)

(ii) உமையாக்களின் வீழ்ச்சிக்கான காரணங்களை விளக்குக.

- ஆட்சி அலுவல்கள் இஸ்லாமிய வழிகாட்டல்களிலிருந்து தூரமானமை (ஆன்மீகம் வேறு அரசியல் வேறு என்ற சிந்தனை...)
- பின்வந்த கலீபாக்களின் பலவீனம்.
- மவாளிகள்,திம்மிகள் புறக்கணிக்கப்ட்டமை
- பைதுல்மால் துஷ்பிரயோகம்
- அரச சொத்துக்களை தவறாகப்பயன்படுத்தியமை.
- கோத்திர உணர்வு.
- வாரிசு நியமனத்தில் ஒழுங்கின்மை.
- கொள்கை முரண்பட்ட ஷீஆக்களும்,கவாரிஜிகளும்.
- அப்பாஸியரின் திட்டமிட்ட பிரச்சாரமும் எழுச்சியும். (10 புள்ளிகள்)

**வினா இல: (05)**

5. (i) ஷரீஆவின் துணை மூலாதாரங்களுள் ஒன்றான மஸ்லஹா முர்ஸலா அல்லது அல்-உர்பு பற்றித் தெளிவுபடுத்துக.

**மஸ்லஹா முர்ஸலா**

- இதன் விளக்கம் – மனித நலனை நோக்காகக் கொணட பகுதி...
- அல் குர் ஆன் சுன்னாவில் தீர்வு கிட்டாத பொழுது, மனித நலனைக் காத்தலைக் கருதி தீர்வு பெறுவதைக் குறிக்கும்.
- மஸ்லஹா முர்ஸலா அடிப்படையில் பெறப்பட்ட தீர்வுகளுக்கு உதாரணம்
  அல்குர்ஆன் தொகுக்கப்படல்.
  சிறைச்சலை உருவாக்கம்.
  உமர் (ரழி) அவர்களை அபூபக்கர் (ரழி) கலீபாவாக தெரிவு செய்தமை.

**அல் உர்பு**

- இதன் விளக்கம் – அதிகமானோர் தமது வாழ்வில் சொல் அல்லது செயல் ரீதியாக பயன்படுத்தி வரும் மரபுகள் அல்லது வழக்காறுகள் உர்பு எனப்படும்..
  ஆதாரம்: (07 : 199)
  "முஸ்லிம்கள் நல்லவை எனக் கருதுபவை அல்லாஹ்விடத்திலும் நல்லவையே" (ஆதாரம் அஹமத்)
  உர்ப் வகை: சொல் சார்ந்தவை, செயல் சார்ந்தவை..

(10 புள்ளிகள்)

(ii) கருத்து வேறுபாடுகளின்போது முஜ்தஹித்கள் பின்பற்றிய ஒழுக்க விதிகளுள் ஐந்தைக் குறிப்பிட்டு, விளக்குக.

- கருத்தொற்றுமையான விவகாரங்களில் பரஸ்பரம் ஒத்துழைத்தல்.
- கருத்து வேறுபாடு கொண்ட விடயங்களில் விட்டுக்கொடுத்தல்.
- ஒருவரை ஒருவர் சாடாதிருத்தல், மதித்து நடத்தல்.
- ஒரு மத்ஹபின்,அல்லது தனிமனிதனின் கருத்துக்களில் பிடிவாதத்தை தவிர்த்தல்.
- அடுத்தவர் பற்றிய நல்லெண்ணத்தை வளர்த்துக் கொள்ளல்.
- நடுநிலையை கையாளுதல்.
- கலைச் சொற்களை சரியாக புரிந்து பயன்படுத்தல். (10 புள்ளிகள்)

வினா இல: (06)

6. (i) இஸ்லாமிய சமூக உருவாக்கத்தில் குடும்பவாழ்வின் வகிபாகம் பற்றி விபரிக்குக.

- இஸ்லாமிய சமூக உருவாக்கத்தின் அடிப்படை குடும்பமாகும்.
- இஸ்லாம் வாழ்வதற்காக வாழும் தனிமனிதர்களை உருவாக்கும் நிறுவனம் குடும்பமாகும்.
- இது தொடர்பான அல் குர்ஆன் ஸுன்னாவின் போதனைகள்:
  "நீங்கள் உங்களையும் உங்கள் குடும்பத்தையும் நரக நெருப்பிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்" (அல் குர்ஆன்)
  "நீங்கள் ஒவ் வொருவரும் பொறுப்பாளர்கள் உங்கள் பொறுப்புகள் பற்றி விசாரிக்கப்படுவீர்கள்" (ஹதீஸ்)
- குடும்ப உருப்பினர்களுக்கிடையிலான உறவுகள், உரிமைகள், கடமைகளை வழியுறுத்துகின்றமை.
- குடும்பத் தலைமைத்துவத்தை ஆண்களுக்கு வழங்கி, கட்டுக்கோப்பான குடும்ப அமைப்புக்கு வழிகாட்டுகின்றமை.
- பெற்றோர், பிள்ளைகளுக்கு நல் ஒழுக்கப்பயிற்சியை வழங்குமாறு பணித்துள்ளமை.( லுக்மான் ( அலை ) தன் மகனுக்கான உபதேசம்..
- குடும்ப வாழ்வுக்கான முன்மாதிரிகளை நபிமார்கள்,சஹாபாக்கள் வாழ்விலிருந்தும் காணலாம்.

(10 புள்ளிகள்)

(ii) யுத்தங்களின்போது போர் வீரர்கள் பின்பற்ற வேண்டிய ஒழுங்குகள் பற்றி நபிகளாரின் போதனைகளைக் குறிப்பிடுக.

- இரத்தம் சிந்துவதை இஸ்லாம் ஹராமாக்கியுள்ளது. தவிர்க்க முடியாத நிர்பந்த நிலையில் யுத்தத்தை அனுமதிக்கிறது.
- யுத்தம் அனுமதிக்கப்பட்ட போதிலும் அதற்கான வறையறைகளை விதித்துள்ளது.
- சமாதானத்துக்கு அழைக்கப்பட்டால் சமாதானத்திற்கு இணங்குமாறு இஸ்லாம் கட்ளையிடுகிறது.
- வயோதிபர்கள், சிறுவர்கள், நோயாளிகள், பெண்கள், அங்கவீனர்கள், துறவிகள், மதத்தலைவர்கள் பாதிக்கப்படக் கூடாது.
- விளை நிலங்கள், நீர் நிலைகள் சேதப்படுத்தப்படக் கூடாது.
- கற்பு சூறையாடப்படக் கூடாது.
- பயன் தரும் மரங்கள் வெட்டப்படக் கூடாது.
- மதத்தலங்கள் சேதப்படுத்தப்படக் கூடாது.
- தலைமைத்துவக் கட்டுப்பாடு.
- புறமுதுகு காட்டி ஓடக் கூடாது.
- ஆத்துமீறல்,பழிவாங்கள் கூடாது.
- யுத்தத்தின் பொழுது எதிரிகள் அபயம் கோரினால் அபயமளிக்க வேண்டும்.

(10 புள்ளிகள்)

**வினா இல: (07)**

7. (i) பல்லின சமூகங்களுடனான சகவாழ்விற்கு இஸ்லாம் எவ்வாறு வழிகாட்டுகிறது என்பதைத் தெளிவுபடுத்துக.

- முஸ்லிம் அல்லாதார் பற்றிய இஸ்லாமியக் கண்ணோட்டம்...
- இவர்களும் அல்லாஹ்வின் படைப்புக்களே.
  "படைப்புக்கள் யாவும் அல்லாஹ்வின் குடும்பமே" (ஹதீஸ்)
- முஸ்லிம் அல்லாதாரின் உயிர்,மானம்,பொருள் முதலாம் அனைத்தும் பாது காக்கப்பட வேண்டும்.
  "முஸ்லிம் அல்லாதார் உரிமைகள், ஒரு முஸ்லிமால் மறுக்கப்பட்டால் மறுமையில் அவர்களுக்கு எதிராக வாதிடுவேன்" ஹதீஸ்.
- பெற்றோர் முஸ்லிம் அல்லாதவராக இருப்பினும் அவர்களுடனான உறவு பேணப்படல் வேண்டும்.
- முஸ்லிம் அல்லாதவராக இருப்பினும் அயலவர் உரிமையைப் பேணல்.
- நீதமாக நடத்தல் – "ஒரு கூட்டத்தின் மீதான குரோதம் அவர்கள் மீது நீதி செலுத்துவதற்கு தடையாக அமையக் கூடாது."(அல் குர்ஆன்)
- இதற் நபிகளாரின் வாழ்வு முன்மாதிரியாக அமைந்தமை:-
  மதினா சாசனம்.
  கொடுக்கல் வாங்கல்.
  நோய் விசாரித்தல்.
- முஸ்லிம் அல்லாத ஒருவரின் பிரேத ஊர்வலத்தின் போது எழுந்து நின்று மதிப்பளித்தமை.
- திம்மிகளுக்கு பாதுகாப்பு வழங்கியுள்ளமை.
- கலீபா உமர் இப்னு அப்துல் அஸீஸ் தனது ஆட்சியில் கிறிஸ்தவ ஆலயங்களை புனரமைப்பு செய்தமை
- ஹிஜ்ரத்தின் போது அப்துல்லாஹ் இப்னு உரைக்கத் என்ற, முஸ்லிம் அல்லாதவரையே தனக்கு வழிகாட்டியாக நபிகளார் (ஸல்) தெரிவு செய்திருந்தமை.
- ஹுனைன் போரின் போது இஸ்லாத்தை தழுவாதிருந்த ஸப்வான் பின் உமையாவின் உதவிகளை நபிகளார் பெற்றமை.
- யூதர் ஒருவரிடம் நபிகளார் கடன் பெற்றமை.
- முஸ்லிமல்லாத மன்னர்கள் நபிகளாருக்கு அனுப்பி வைத்த அன்பளிப்புகளை மனமுவந்து ஏற்றுக் கொண்டமை. (10 புள்ளிகள்)

(ii) "ஹிஜ்ரத்திற்கான ஒழுங்குபடுத்தலில் திட்டமிடல் பிரதான அம்சமாக அமைந்தது" தெளிவுபடுத்துக.

- நுபுவத் 13இல் நபியவர்களும் தோழர்களும் மேற்கொண்ட மதீனா ஹிஜ்ரத் திட்டமிடப்பட்ட ஒரு நிகழ்வாகும்.
- ஹிஜ்ரத்துக்காக பல இடங்களை பொருத்தமாக தேடியமை- (அபிஸீனியா,தாயிப்..)
- எதிரிகள் அறியா வண்ணம் ஸஹாபாக்களை,இருவர் இருவராக அனுப்பி வைத்தமை.
- முன் கூட்டியே அபூபக்கர்(ரழி) அவர்களுடன் நபியவர்கள் மதினா ஹிஜரத் தொடர்பாக கலந்துறையாடி சில ஏற்பாடுகளை செய்யப்பணித்தமை.
- வேறு பாதையை தேரந்தெடுத்தமையும் ,முஸ்லிம் அல்லாத ஒருவரை வழிகாட்டியாக நியமித்தமையும் (அப்துல்லாஹ்பின் உரைக்கத்)
- தவ்ரில் தங்கியமை,அதற்காக உணவு,நீர் எடுத்து வர ஒருவரை நியமித்தமை
- அகபா உடண்படிக்கை செய்து கொண்டமை.
- முன் கூட்டியே முஸ்அப் இப்னு உமைரை மதீனாவுக்கு அனுப்பிவைத்தமை.
- இறைக் கட்டளை வரும் வரை காத்திருந்தமை.
- அலி (ரழி) அவர்களை, அமானிதப் பொருட்களுடனும், தன் படுக்கையிலும் அமர்த்தியமை

(10 புள்ளிகள்)

வினா இல:(08)

8. (i) இலங்கை முஸ்லிம் முன்னோடிகளுள் ஒருவரான ஐ.எல்.எம்.ஏ. அஸீஸ் அவர்களின் சமய, சமூக, அரசியல் பங்களிப்புகள் பற்றி ஆராய்க.

- கி.பி.1867 ஐதுருஸ் லெப்பை என்பவருக்கு மகனாக கொழும்பில் பிறந்தமை.
- மார்க்க அறிவையும்,ஆங்கில அறிவையும் சிறு வயதிலேயே பெற்றுக் கொண்டமை.
- சமய, சமூக, அரசியல் விழிப்புனர்வை ஏற்படுத்தும் வகையில் பல பத்திரிகைகளை வெளியிட்டமை.
- சமயம் தொடர்பான நூல்கள் மொழி பெயர்க்கப்படல் வேண்டும்,குத்பாக்கள் தமிழ் மொழியில் நிகழ்த்தப்பட வேண்டும் என வலியுறுத்தியமை
- முஸ்லிம் விவாக விவாக ரத்து விடயங்களை பதிவு செய்வதற்காக முயற்சித்தமை.
- கொழும்பு கல்விக் கழகத்தை உருவாக்கி, முஸ்லிம்களின் கல்விக்காக பணியாற்றியமை.
- ஸாஹிராக்கல்லூரி உருவாக்கத்திற்கும் பங்காற்றியமை.
- முஸ்லிம்களின் தனித்துவ அடையாளமாகத்திகழ்ந்த துருக்கித் தொப்பிக்காகப் போராடியமை.
- சட்டவாக்க சபையில் முஸ்லிம் பிரதிநிதித்துவத்துக்காக போராடியமை.
- முஸ்லிம்களின் தனித்துவத்தை பாதுகாப்பதில் முன்னின்று உழைத்தமை.

(10 புள்ளிகள்)

(ii) அழகியல் பற்றிய இஸ்லாத்தின் நோக்கையும் மஸ்ஜித் கட்டடக்கலையின் பிரதான கூறுகளில் நான்கினையும் சுருக்கமாக விளக்குக.

- மனிதனின் உள்ளத்திற்கு இன்பத்தையும், அமைதியையும் வழங்கும் ஒரு சாதனமே அழகியலாகும்.
- மனிதனுல் இயல்பாக உள்ள அழகியல், அறிவியல் உணர்வு.
- இஸ்லாம் அழகிற்கும்,தூய்மைக்கும் வழங்கும் முக்கியத்துவத்தை வேறு எந்த மதங்களும் வழங்க வில்லை.
- இஸ்லாம் அழகியலை ஆன்மீக நோக்கத்துடன் நோக்குகிறது.
- அழகு பற்றிய குர்ஆன் ஹதீஸ்:-

  “அல்லாஹ் அழகானவன் அவன் அழகையே விரும்புகிறான்” (ஹதீஸ்)

  அழகு பற்றிய குர்ஆன் ஹதீஸ் பிரயோகங்கள்-

  ஹஸன், ஜமால், ஸீனத்..
- அழகியலை தவரான நோக்கங்களுக்காக பயன்படுத்தக் கூடாது என்ற இஸ்லாதின் வழிகாட்டல்கள்...
- சகல அம்சங்களிலும் அழகு புலப்பட வேண்டும் என்பதை இஸ்லாம் விரும்புகின்றமை .

  அழகிய கடன்

  அழகிய வரலாறு

  அழகிய பேச்சு.....

மஸ்ஜித் கட்டடக்கலை கூறுகள்:

- குப்பா, மினாரா,மிம்பர்,மிஹ்ராப்,மாடவில்
- இவைகளின் அமைப்பியல்,அழகு பற்றிய சுறுக்கமான விளக்கம்.
- “மிம்பர்” கட்டடக்கலையின் பிரதான அம்சமாக மாறுமளவுக்கு பல்வேறு அமைப்புக்களில் மரப்பலகை இரும்பு, செங்கற்கள், சலவைக்கற்கள் போன்றவற்றால் கலை நுணுக்கம் பேணி கட்டப்படலாயின.

- "மிஹ்ராப்" முதலில் மதீனா, புஸ்தாத், டமஸ்கஸ் மஸ்ஜிதுகளில்தான் அமைக்கப்பட்டன. "கிப்லா" திசையைக் காட்டும் வகையில் உள்ளால் குடையப்பட்ட அமைப்பில் காணப்படுதல்.
- "குப்பா" எனப்படும் கும்மட்டம் உமைய கலீபா அப்துல் மலிக்கினால் முதன் முதலில் நிறுவப்பட்டது. பின்னர் எகிப்தில் உமர் மஸ்ஜித், ஸ்பைனிலுள்ள குர்துபா மஸ்ஜித். டியூனிஸிய செய்தூன் மஸ்ஜித் முதலானவற்றில் இவ்வாறான கும்மட்டங்கள் அமைக்கப்பட்டமை.
- "மாடவில்" முஸ்லிம்களது கட்டடக்கலையின் ஓர் அம்சமாகும். அது டமஸ்கஸ் மஸ்ஜிதின் மேல்மாடியிலும், எகிப்தில் இப்னு தூலூன் மஸ்ஜிதிலும், கைரவான் ஜாமிஆ மஸ்ஜிதிலும், குர்துபா மஸ்ஜிதிலும் பல வடிவ மாடவில்கள் காணப்படுகின்றமை.

(10 புள்ளிகள்)